# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அயற்சொல் அகராதி |
| முதல் பதிப்பு | : | திருவள்ளுவராண்டு 2052<br>துலை (ஐப்பசி) 2021 நவம்பர் |
| பதிப்புரிமை | : | தமிழ்நாடு அரசு |
| பக்கம் | : | 8 + 392 |
| தாள் | : | 80 ஜி.எஸ்.எம். மேப்லித்தோ |
| விலை | : | உருபா |
| நூலின் அளவு | : | டெம்மி 1 /8 |
| நூல் வெளியீடும்,<br>கிடைக்குமிடமும் | : | **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,**<br>எண் 75, முதல் தளம்,<br>நகர் நிருவாக அலுவலக வளாகம்,<br>எம்.ஆர்.சி. நகர்,<br>சாந்தோம் நெடுஞ்சாலை,<br>சென்னை–28.<br>தொலைபேசி எண்: 044–29520509<br>044–29520462<br>மின்னஞ்சல் முகவரி :<br>dtedp1974@gmail.com |
| அச்சீடு | : | அரசு மைய அச்சகம்,<br>சென்னை–600 079. |

**தங்கம் தென்னரசு**
மாண்புமிகு அமைச்சர்,
தொழில்துறை, தமிழ் ஆட்சிமொழி,
தமிழ்ப் பண்பாடு (ம) தொல்லியல் துறை

தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

# வாழ்த்துரை

**"என்றும் தமிழ் வளர்க – கலை**
**யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக!"**
– பாரதிதாசன்

பிள்ளைகள் கல்வி கற்காமலேயே பெற்றோரைப் பின்பற்றித் தாமே தம் பிள்ளைப் பருவத்தில் பேசக் கற்றுக்கொள்வதுதான் வழக்குமொழி; தாய்மொழி என்பது மொழியியல் பேராசிரியர்களின் கருத்து.

மொழியானது மேன்மேலும் வளர்ந்து மக்களை வாழ்விக்க வேண்டுமானால் அது பல்வேறு துறைகளிலும் பயன்படுத்தப்பட வேண்டும். ஏட்டிலே இடம்பெற்றால் மட்டும் போதாது. நாட்டு நடவடிக்கைகள் அதன்வழி நடைபெற வேண்டும்; மக்கள் நாவிலே வழங்க வேண்டும்; அன்றாட வாழ்விலே புழங்க வேண்டும்.

'புதிய புதிய துறைகள் தோன்றுந்தொறும், ஏராளமான கலைச்சொற்கள் தோன்றுதற்கும், வழங்கும் சொற்களில் புதிய பல பொருள்கள் இணைந்து விரிவடைவதற்கான சூழ்நிலையில் அகரமுதலி மிகவும் இன்றியமையாத நூலாகிறது' என்று 1974இல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கிய **மேனாள் மாண்புமிகு முதலமைச்சர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள்** எடுத்துரைத்தார்கள்.

இதுபற்றி **மாண்புமிகு முதலமைச்சர் தளபதி திரு.மு.க.ஸ்டாலின்** அவர்கள் மிகுந்த அக்கறை கொண்டு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் ஒரு செயலியை உருவாக்கி, அதன்வழி பல்வேறு துறைசார்ந்த வல்லுநர் குழு அமைத்து புதிய கலைச்சொற்களைத் திரட்டி சொற்குவையில் பதிவேற்றம் செய்யலாம் என்று அறிவிறுத்தினார்கள் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அவ்வாறான வளர்ச்சிக்கு மொழியில் பிறமொழிச்சொற்கள் கலக்கலாகாது. ஆனால், இன்றைய நிலையில் பன்னெடுங்காலமாகப் பிறமொழிச் சொற்களைக் கலந்து பேசுவதென்பது தன்னுடைய மேதைமையைக் காட்டும் என்னும் பொய்யான கற்பனையின் அடிப்படையிலும், தனக்குத் தன் தாய்மொழியாம் தமிழ் மட்டுமின்றிப் பிறமொழியிலும் புலமையுண்டென்பதைக் காட்டுவதற்காகவும்

மொழிக்கலப்பை வலிந்து புகுத்துகின்ற போக்குக் காணப்படுகின்றது. இத்தகைய போக்குகளாலும், வணிகத் தொடர்பு உள்ளிட்ட காரணங்களால் பிற மொழியாளர்களுடன் உறவாட வேண்டிய நிலையிலும் பிறமொழிச் சொற்களின் கலப்பு, நம் தாய்மொழியாம் தமிழ் மொழியில் நேர்ந்து விட்டது.

காலங்காலமாகப் பேசப்பட்டு வந்தமையால் அப்பிறமொழிச் சொற்களும் தமிழ்ச்சொற்கள்போல் தோன்றுவதால் அவையும் தமிழ்மொழிச் சொற்களே என்று கற்றாரும் கல்லாதாரும் மயங்கி இயங்குகின்றனர்.

இங்ஙனம் பிறமொழிச் சொற்களைக் கலப்பதால் அச்சொற்களுக்கான தமிழ்ச்சொற்களின் வழக்காறுகள் மறைக்கப்பட்டு, மறக்கப்பட்டு அழிந்துவிடும் நிலை ஏற்பட்டுத் தமிழின் சொல்வளம் குன்றிப் போகும்.

அங்ஙனம் குன்றிப் போனால் மொழி வளர்ச்சியில் செழுமை மங்கிப் போகும். அவ்வாறு மங்குவதைத் தவிர்ப்பதே மொழி வளர்ச்சியில் முதன்மைக் கூறாகும்.

அந்த உண்மையை உணர்ந்த தமிழக அரசு தமிழில் கலந்துள்ள அயற்சொற்களைக் கண்டறிந்து அவற்றை அகரவரிசைப்படுத்தி அவற்றிற்கு இணையான தமிழ்ச்சொற்களைக்கூறும் அயற்சொல் அகராதியை உருவாக்க வேண்டுமென்ற எண்ணத்தின் அடிப்படையில் தோன்றியதே அயற்சொல் அகராதி என்னும் இத்திட்டமாகும்.

தமிழில் அகராதிகளைத் தொகுப்பதற்கென்றே உருவாக்கப்பட்டுச் செயற்பட்டுக் கொண்டிருக்கும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் இத்திட்டத்தைச் செயற்படுத்திட சட்டமன்ற அறிவிப்பாக அறிவிக்கப்பட்ட திட்டம் நிறைவெய்தி இன்று நூலாக உங்கள் கைகளில் தவழ்கிறது.

இந்நூலில் உள்ள தூயதமிழ்ச் சொற்கள் புதிய விழிப்புணர்வை ஏற்படுத்தும். இனிவரும் தலைமுறை மக்கள் பிறமொழிச் சொற்களைத் தவிர்த்து தூயதமிழ்ச் சொற்களையே பயன்படுத்துவார்கள். எனவே, காலத்திற்கேற்ற சொற்கருவூலமாக வெளியிடப் பெற்றுள்ள இந்நூலை உருவாக்கிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்களின் தலைமையிலான இயக்கக் குழுவினருக்குப் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**வாழ்த்துகளுடன்**

**(தங்கம் தென்னரசு.)**

**மகேசன் காசிராஜன்** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி (ம) செய்தித்துறை

தலைமைச் செயலகம்
சென்னை – **600 009.**

நாள்: **29.09.2021**

## அருந்தமிழுக்கு அணிகலம்

தமிழுணர்ச்சி – தமிழ் மலர்ச்சி – தமிழ் மணம் – தமிழ் ஒளி – தமிழ் முரசு – தமிழ்க் கலை – தமிழ் விருந்து – தமிழ் வெள்ளம் தமிழ்நாட்டின் மாட்சியாகும்.

தன்னேரில்லாத மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் தலைமையில் ‘எங்கும் தமிழ்’, ‘எதிலும் தமிழ்’, ‘எல்லாம் தமிழ்’ என்ற நிலை ஓங்கி வளர்கின்ற சூழலில் மாண்புமிகு தொழில்கள், தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சரின் சீரிய வழிகாட்டுதலில் தமிழ் வளர்ச்சி துறை தகத்தகாயமாக மின்னுகிறது.

ஒரு மொழியின் சொல்வளம் என்பது அம்மொழியில் வழங்கும் சொற்களின் எண்ணிக்கையைச் சார்ந்தது. 1500 ஆண்டுக்கால வரலாறு கொண்ட ஆங்கில மொழியில் 10,22,000 சொற்கள் வழங்குகின்றன. 98 நிமிடத்திற்கு ஒரு சொல் ஆங்கிலத்தில் வழக்கிற்கு வருகிறது. நாளொன்றுக்கு 14 சொற்கள் ஆங்கில வழக்கில் ஏறுகின்றன. ஆண்டொன்றுக்கு 8500 சொற்கள் நிலைபெறுகின்றன. ஆனால், 3200 ஆண்டுக்கால வரலாறு கொண்ட தமிழ் மொழியில் வழங்கும் சொற்களின் எண்ணிக்கை குறித்த கணக்கும், அச்சொற்களின் பட்டியலும், அவற்றின் வழக்காற்று விவரங்களும் நம்மிடையே உறுதியாக இல்லை என்ற குறையைக் களையும் நோக்கில், தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அகர முதலிகளைத் தொகுத்து வழங்குவதைச் சிறப்பான பணியாகக் கொண்டு செயலாற்றுகிறது.

தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களை இனங்கண்டு, அவற்றைத் தனியே பிரித்து அச்சொற்களுக்கு நிகரான தூயதமிழ்ச் சொற்களை அகரவரிசைப்படுத்தி **அயற்சொல் அகராதி** வெளிவருவது சாலச்சிறப்பாகும்.

நான் பள்ளியில் பயின்றபோது, மாணவர்கள் அனைவரும் ஆங்கிலக் கையகராதி, உலக நாடுகள் வரைபடம், வரைகலைப் பேழை ஆகிய மூன்றையும் எப்போதும் வகுப்பிற்கு எடுத்து வர வேண்டும் என்று வலியுறுத்திய நினைவு எனக்கு வருகிறது.

நல்ல மாணவன் எந்த நிலையிலும் ஒரு சொல்லுக்குப் பொருள் காணும் பயிற்சியை அகராதியின் வழியாகக் கண்டு தெளிகிற பழக்கம் அமைய வேண்டும். அப்படிப்பட்ட நல்லுணர்வுக்கு ஊக்கம் தருகின்ற வகையில் மேற்குறித்த இந்தச் சிற்றகராதி வெளியிடப் பெறுகின்றது.

திராவிட மொழிகளின் பழம்பெருமைக்கும், கலப்பில்லாத தூய மொழி வளம், இலக்கிய வளம், பண்பாட்டு வளம் ஆகியவற்றுக்கு அரணாகத் தமிழ் வளர்ச்சித் துறையின் கட்டுப்பாட்டில் இயங்கும் செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் செழுமையான முறையில் பல அகராதிகளை வெளியிட்டு தமிழ் மொழியின் ஆக்கத்திற்கு அருந்தொண்டாற்ற வேண்டுகிறேன்.

அன்புடன்

**(மகேசன் காசிராஜன்)**

**முனைவர் கோ.விசயராகவன்**
இயக்குநர்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்

நகர் நிருவாக அலுவலக வளாகம்
முதல்தளம், எண்.75
சாந்தோம் நெடுஞ்சாலை,
எம்.ஆர்.சி.நகர்,
சென்னை – 600 028.

## பதிப்புரை

**"வீறுடைய செம்மொழி தமிழ்மொழி – உலகம்
வேரூன்றிய நாள்முதல் உயிர்மொழி"**
– பெருஞ்சித்திரனார்.

மக்களின் எண்ணவோட்டங்களை வெளிப்படுத்தும் கருவியாக அமைவது மொழி. அம்மொழி தாய்மொழியாய் இருத்தலே சிறப்பு.

தமிழ்மொழி தூய்மையாக இருக்க வேண்டும். ஆனால் வணிகம், சமயம், ஆட்சி, கல்வி, இடப்பெயர்வு ஆகியவற்றால் மொழிக்கலப்பு, கடன் வாங்கல், மொழித்திரிபு ஆகியன நிகழ்கின்றன. ஆட்சியாளர்களால் அவர்களது மொழிச்சொற்கள் ஆளப்படுவோரிடம் விரைந்து பரவுவதுமுண்டு.

அவ்வாறான பரவலும், கலப்பும், திரிபும் தாய்மொழியின் சொல் வளத்தைக் குறைத்துவிடும்; குறைத்துவிடுவதோடில்லாமல் மொழி வளர்ச்சியையும் தடைப்படுத்தும். அவ்வாறு தடைப்படுத்துவதால் மொழியின் சொல்லாக்கமும், சொற்புழக்கமும் நறுங்கிவிடும். அவ்வாறான நிலை மொழியின் இயல்பு வளர்ச்சிக்கு இடையூறென்பது வெள்ளிடை மலை.

அத்தகைய நறுங்குதலிலிருந்து தாய்மொழியைக் காப்பாற்றிட எல்லா மொழிவாணர்களும் மொழித்தூய்மை இயக்கத்தை முன்னெடுத்துச் செல்வதை உலகம் முழுவதும் காணலாம்.

தமிழ்மொழி ஒரு இயற்கைமொழி. எழுத்துக் கூட்டலுக்கேற்ற பலுக்கலும், பலுக்கலுக்கேற்ற எழுத்துக் கூட்டலும் அமைந்த ஒட்டுநிலை மொழி. சொல்வளம் மிகுந்துள்ள இம்மொழியில் பிறமொழிச் சொற்களின் ஊடாட்டத்தைத் தவிர்க்க விழைந்த சான்றோர்களால் தோற்றுவிக்கப்பட்டதுதான் தனித்தமிழியக்கம்.

இத்தனித்தமிழியக்கத்தின் முன்னோடியாக மறைமலையடிகளாரையே தலைமைப் பொறுப்பில் முன்னிறுத்துவர். அவரை அடியொற்றித் தேவநேயப் பாவாணர், பெருஞ்சித்திரனார், அண்ணல் தங்கோ, பொன்னம்பலனார் எனப் பல பெருமக்களும் தமிழில் பிறமொழிக் கலப்பைத் தவிர்க்க வலியுறுத்தினர்.

பிறமொழிச் சொற் கலப்புடன் பேசும் நடையால் தமிழ்மொழியில் சொற்பெருக்கம் தடைபெற்றுப்போனதையுணர்ந்த மொழிவாணர்கள் சமற்கிருதச் சொற்கலப்பை அறவே தவிர்க்கத் தலைப்பட்டனர்.

அவ்வாறு கலந்துவிட்ட சமற்கிருதச் சொற்களைத் தொகுத்து அகரமுதலி வடிவில் நிரல்படுத்தி அவற்றிற்கு இணையான நல்ல தமிழ்ச்சொற்களை வழங்கிட வேண்டுமென்னும் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் விருப்பத்தை மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி, தமிழர் பண்பாடு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் அவர்கள் சட்டமன்ற அறிவிப்பாக வெளிப்படுத்தினார்கள்.

அந்த அறிவிப்புக்கிணங்க செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர்கள், பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர், கணிப்பொறியாளர்கள் ஆகியோரைக் கொண்ட அகராதி உருவாக்கக் குழுவினர், தமிழிற் கலந்துள்ள பிறமொழிச் சொற்களை, குறிப்பாகச் சமற்கிருதச் சொற்களைத் தொகுத்து வரிசைப்படுத்தி அவற்றிக்கு நேரிய செந்தமிழ்ச் சொற்களைப் புனைந்து வழங்கினர்.

அவ்வாறு வழங்கப்பட்ட சொற்களை ஒருங்கிணைத்து நிரல்படுத்தி அகரமுதலி வடிவில் கணியச்சு செய்ததைத் தமிழக அரசின் எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை இயக்ககத்தினர் அழகிய முறையில் அச்சிட்டு வழங்கினர்.

இந்த அகராதிப் பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் வழங்கியுதவிக் கொண்டிருக்கும் **மாண்புமிகு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின்** அவர்களுக்கும், மாண்புமிகு தொழில்துறை, தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் **திரு.தங்கம் தென்னரசு** அவர்களுக்கும், இயக்ககப் பணிகளில் எங்களை ஆற்றுப்படுத்தும் மதிப்புமிகு தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசு செயலாளர் **திரு. மகேசன் காசிராசன்** அவர்களுக்கும், இந்த அகராதியைச் சிறப்பாக உருவாக்கிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் மேனாள் இயக்குநர் திரு. த.காமராசு அவர்களுக்கும் மற்றும் இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா.பூங்குன்றன், திரு.சு.வீரவேலு, முனைவர் தி.பாலசுப்பிரமணியன், திரு.கி.தமிழ்மணி, மேனாள் பதிப்பாசிரியர்கள் முனைவர் மு.கண்ணன், முனைவர் மு.கோமதிவள்ளியம்மை, உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி, தொகுப்பாளர்கள் திரு.வே.பிரபு, திரு.கி.இராமர், திருமதி ஜெ. சாந்தி, முனைவர் வே. கார்த்திக், திருமதி கு.சங்கீதா, கணிப்பொறியாளர்கள் திருமதி க.கஸ்தூரி, திரு.ப.தீபக், மேனாள் கண்காணிப்பாளர் திரு.ஆ.சுந்தரவரதன், ஓவியர் சா.கி.கணேசன், கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து (ம) நிருவாகப் பணியாளர்கள் பா.சரண்யா, நா.பாலகிருஷ்ணன், வெ.சுதாகர், சீ.ஸ்ரீகாந்த், து.ரஜினிகாந்த், இரா.கற்பகம், ஆ.குணசுந்தரி உள்ளிட்ட அனைத்து பணியாளர்களுக்கும் மனமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(கோ.விசயராகவன்)**

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**பதிப்பாசிரியர்கள்**

முனைவர் மா. பூங்குன்றன்

திரு சு. வீரவேலு

முனைவர் மு. கண்ணன்
(ஒருங்கிணைப்பாளர்)

முனைவர் தி. பாலசுப்பிரமணியன்

திரு. கி. தமிழ்மணி

முனைவர் மு. கோமதிவள்ளியம்மை

திரு. ஏ. காந்தி,
உதவிப் பதிப்பாசிரியர்

**தொகுப்பாளர்கள்**

முனைவர் வே. கார்த்திக்

திரு. கி. இராமர்

திருமதி ஜெ. சாந்தி

திரு. வே. பிரபு

திருமதி கு. சங்கீதா

திருமதி க. கஸ்தூரி
கணிப்பொறியாளர்

திரு. ப. தீபக்
கணிப்பொறியாளர்

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அக்கசாலை (ச)** | – | மாழைப் பணியகம் |
| **அக்கசூத்திரம் (த+ச)** | – | உருத்திராக்க மாலை |
| **அக்கதம் (ச)** | – | பொரி, தவசம் |
| **அக்கதயோனி (ச)** | – | கன்னி |
| **அக்கதை (ச)** | – | அட்சதை பார்க்க |
| **அக்கப்போர் (உ)** | – | வம்புப்பேச்சு, வீண்பேச்சு |
| **அக்கபாடம் (ச)** | – | மற்போர் பயிற்சிக்களம் |
| **அக்கம்[1] (ச)** | – | அட்சரேகை பார்க்க |
| **அக்கம்[2] (ச)** | – | அக்ஷம் பார்க்க |
| **அக்கமம் (ச)** | – | பொறாமை |
| **அக்கரச்சுதகம் (ச)** | – | நீங்கெழுத்துப்பா |
| **அக்கரதாரணை (ச)** | – | சிவ ஓகங்களுள் ஒன்று |
| **அக்கரம்[1] (ச)** | – | அட்சரம் பார்க்க |
| **அக்கரம்[2] (ச)** | – | வானம், மேற்கட்டு |
| **அக்கர வர்த்தனம் (ச)** | – | சேர்பெழுத்துபா |
| **அக்கரவிலக்கணம் (ச+த)** | – | எழுத்திலக்கணம் |
| **அக்கரன் (ச)** | – | கடவுள் |
| **அக்காணி (ச)** | – | அச்சாணி |
| **அக்கானி (ச)** | – | பதநீர் |
| **அக்கி[1] (ச)** | – | அக்ஷி பார்க்க |
| **அக்கி[2] (பி)** | – | கொப்புளம் |
| **அக்கிச்சூர் (ச)** | – | அக்கிநோய் பார்க்க |
| **அக்கிதாரை (ச)** | – | விழி |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அக்கிநோய் (ச)** | – | கண்ணோய் வகை |
| **அக்கியானம் (ச)** | – | அறியாமை |
| **அக்கியானி (ச)** | – | புறச்சமயத்தான் |
| **அக்கிரகாரம் (ச)** | – | பார்ப்பனச்சேரி |
| **அக்கிரசங்கை (ச)** | – | பெருந்தகை மதிப்பு |
| **அக்கிரசம்பாவனை (ச)** | – | முதல் மரியாதை |
| **அக்கிரசன் (ச)** | – | அண்ணன் |
| **அக்கிரணி (ச)** | – | முதல்வன் |
| **அக்கிரம்[1] (ச)** | – | நுனி |
| **அக்கிரம்[2] (ச)** | – | படையலுணா |
| **அக்கிர மண்டபம் (ச+த)** | – | கோயிலின் முக மண்டபம் |
| **அக்கிரமப் பேச்சு (ச+த)** | – | கேடு விளைவிக்கும் சொல் |
| **அக்கிரமம்[1] (ச)** | – | அட்டூழியம், கொடுமை |
| **அக்கிரமம்[2] (ச)** | – | ஒழுங்கின்மை |
| **அக்கிரமாமிசம் (ச)** | – | நெஞ்சாங்குலை |
| **அக்கிரமி (ச)** | – | முறைகேடன் |
| **அக்கிராசனம் (ச)** | – | அவைத்தலைமை |
| **அக்கிராசனர் (ச)** | – | அவைத் தலைவர் |
| **அக்கிராசனபதி (ச)** | – | அவைத் தலைவர் |
| **அக்கிராரம் (ச)** | – | அக்கிரகாரம் பார்க்க |
| **அக்கிலிப் பிக்கிலி (ச)** | – | மனக்குழப்பம் |
| **அக்கினி (ச)** | – | நெருப்பு, தீ, அழல் |
| **அக்கினிக்கண் (ச+த)** | – | செங்கண் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அக்கினிக்கண்ணன்(ச+த)** | – | செங்கண்ணன் |
| **அக்கினிக்கணம் (ச)** | – | தீப்பொறி |
| **அக்கினிக்கப்பரை (ச)** | – | தீச்சட்டி |
| **அக்கினிக்கரப்பான் (ச)** | – | கரப்பான்நோய் |
| **அக்கினிக்கல் (ச+த)** | – | சக்கிமுக்கிக்கல், அழற்கல் |
| **அக்கினிக்காரியம் (ச)** | – | எரியோம்பல், தீ வளர்த்தல் |
| **அக்கினிக்காரியம் செய் (ச)** | – | அழலோம்பு, எரியோம்பு |
| **அக்கினிக்காற்று (ச+த)** | – | வெப்பக்காற்று |
| **அக்கினிக்குண்டம் (ச+த)** | – | வேள்வித்தீ வளர்க்கும் குழி |
| **அக்கினிக்குலம் (ச+த)** | – | தீக் குலம் |
| **அக்கினிக் கொழுந்து (ச+த)** | – | தீ நாக்கு |
| **அக்கினிக்கோணம்(ச+த)** | – | தென்கிழக்கு மூலை |
| **அக்கினிச்சட்டி (ச+த)** | – | தீச்சட்டி |
| **அக்கினிசக்தி (ச)** | – | நெருப்பாற்றல் |
| **அக்கினிசாட்சி (ச)** | – | தீயின் முன்னிலை |
| **அக்கினிசிலை[1] (ச)** | – | நெருப்புக்கல் |
| **அக்கினிசிலை[2] (ச)** | – | தீத்தட்டிக்கல் |
| **அக்கினிசுவாசம் (ச)** | – | தீப்போல் சுடும் உயிர்ப்பு |
| **அக்கினிசுவாலை (ச)** | – | தீ நாக்கு, தீக்கொழுந்து |
| **அக்கினித்தாழி (ச+த)** | – | தீச்சட்டி |
| **அக்கினித் திராவகம் (ச)** | – | எரி நீர்மம் |
| **அக்கினித் திசை (ச)** | – | தென் கிழக்கு |
| **அக்கினித் தேவன் (ச)** | – | தீக் கடவுள் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அக்கினித்தோஷம் (ச)** | – | வளிநோய் |
| **அக்கினி நட்சத்திரம் (ச)** | – | கத்தரி வெயில் |
| **அக்கினி நாள் (ச)** | – | கத்தரி வெயில் நாள் |
| **அக்கினி நிறத்தோன் (ச)** | – | தீ வண்ணன் |
| **அக்கினி நீர் (ச+த)** | – | எரிநீர் |
| **அக்கினிப் பரீட்சை (ச)** | – | அழல்தேர்வு, கடுந்தேர்வு |
| **அக்கினிப் பிரவேசம் (ச)** | – | தீக்குளித்தல், தீப்பாய்தல் |
| **அக்கினிப் பிரளயம் (ச)** | – | தீயாலுண்டாகும் அழிவு |
| **அக்கினிப் பிழம்பு (ச)** | – | தீச் சுவாலை |
| **அக்கினிமாந்தம் (ச)** | – | செரியாமை நோய் |
| **அக்கினிமானி (ச)** | – | வெப்ப அளவி |
| **அக்கினிமூலை (ச+த)** | – | தென்கிழக்கு மூலை |
| **அக்கினியன் (ச)** | – | செவ்வாய் |
| **அக்கினி ரணம் (ச)** | – | தீப்புண், அழற்புண் |
| **அக்கினி ரோகம் (ச)** | – | கண்ணோய் வகை |
| **அக்கினி லிங்கம் (ச)** | – | தீ வடிவான சிவன் |
| **அக்கினி மாகம் (ச)** | – | புகை |
| **அக்கினிவிரணம் (ச)** | – | அக்கினி ரணம் பார்க்க |
| **அக்கினி வீரியம் (ச)** | – | பொன் |
| **அக்கினி ஜாதன் (ச)** | – | அனலிற் பிறந்தோன் |
| **அக்கினி ஜூவாலை (ச)** | – | தீப் பிழப்பு |
| **அக்கீம் (உ)** | – | மகமதிய மருத்துவன் |
| **அக்கு (உ)** | – | உரிமை |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அக்குசு (உ)** | – | அக்கறை |
| **அக்குத்தார் (உ)** | – | உரிமையாளன் |
| **அக்குத்தொக்கு (உ)** | – | ஒட்டுப்பற்று, தொடர்பு |
| **அக்குரு (ச)** | – | அகில் |
| **அக்குரோணி (ச)** | – | பெரும்படை |
| **அக்குல்லி (ச)** | – | பிட்டு |
| **அக்ரகாரம் (ச)** | – | அக்கிரகாரம் பார்க்க |
| **அகங்கரி (ச)** | – | செருக்கு |
| **அகங்கரிப்பு (ச)** | – | செருக்கு |
| **அகங்காரம்[1] (ச)** | – | தன்முனைப்பு, திமிர் |
| **அகங்காரம்[2] (ச)** | – | செருக்கு |
| **அகங்காரி (ச)** | – | திமிரானவள் |
| **அகசியம் (ச)** | – | வேடிக்கை |
| **அகடம் (ச)** | – | பொல்லாங்கு |
| **அகடவிகடம் (ச)** | – | பகடி, தந்திரம் |
| **அகடன் (ச)** | – | நெறியில்லாதவன் |
| **அகடியம் (ச)** | – | நயனின்மை |
| **அகண்ட தீபம் (ச)** | – | அணையாவிளக்கு |
| **அகண்ட பரிபூரணம் (ச)** | – | எங்கும் நிறைந்த தன்மை |
| **அகண்டம்[1] (ச)** | – | எல்லாம், எங்கும் |
| **அகண்டம்[2] (ச)** | – | மூளை |
| **அகண்டன் (ச)** | – | முழுமையானவன், கடவுள் |
| **அகண்டிதன் (ச)** | – | பிரிவிலி |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
| --- | --- | --- |
| **அகத்தியன் (ச)** | – | ஆக்கத்தன் |
| **அகத்தீஸ்வரப்புல் (ச+த)** | – | அருகம்புல் |
| **அகதக்காரன் (ச+த)** | – | மருத்துவன் |
| **அகதன் (ச)** | – | நோயிலி |
| **அகதி (ச)** | – | ஏதிலி, புலம்பெயர்ந்தோன் |
| **அகந்தை (ச)** | – | தற்பெருமை |
| **அகம்பன் (ச)** | – | அசைக்கப்படாதவன் |
| **அகம்பாவம் (ச)** | – | செருக்கு |
| **அகர் (ச)** | – | அகில் |
| **அகர்ணம் (ச)** | – | செவிடு |
| **அகர்பத்தி (ச)** | – | அகில் மணத்தி |
| **அகர்மம் (ச)** | – | செயலின்மை |
| **அகலிகை (ச)** | – | கன்னி |
| **அகற்பன் (ச)** | – | ஒப்பிலாதவன் |
| **அகஸ்மாத்து (ச)** | – | எதிர்பாரா நேர்வு |
| **அகாதம் (ச)** | – | மிகுதி |
| **அகாதன் (ச)** | – | வஞ்சகன் |
| **அகாயன் (ச)** | – | கடவுள் |
| **அகாரணம்[1] (ச)** | – | காரணமின்மை |
| **அகாரணம்[2] (ச)** | – | நேர்ச்சி |
| **அகாரம் (ச)** | – | வீடு |
| **அகாரியம் (ச)** | – | தகாத செயல் |
| **அகாருண்ணியம் (ச)** | – | அருளின்மை |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அகாலம் (ச)** | – | தகாக்காலம் |
| **அகால மரணம் (ச)** | – | காலமல்லாக் காலச் சாவு |
| **அகிதம் (ச)** | – | உரிமையின்மை |
| **அகிதர் (ச)** | – | பகைவர் |
| **அகிம்சை (ச)** | – | கொல்லாமை |
| **அகிலம்[1] (ச)** | – | நிலவுலகம், ஞாலம் |
| **அகிலம்[2] (ச)** | – | எல்லாம் |
| **அகிலாண்ட கோடி (ச+த)** | – | எண்ணிலா உலகங்கள் |
| **அகிலாண்ட நாயகி (ச)** | – | அனைத்துலக இறைவி |
| **அகிலாண்டம் (ச)** | – | அனைத்துலகம் |
| **அகினம் (ச)** | – | குறைவின்மை |
| **அகினன் (ச)** | – | பெரியோன், மேலோன் |
| **அகிற்கூட்டு (ச)** | – | வாசனைக் கலவை |
| **அகீர்த்தி (ச)** | – | புகழ்க்கேடு, இகழ் |
| **அகுணி (ச)** | – | முடவன் |
| **அகுதம் (ச)** | – | அழிவு |
| **அகூடகந்தம் (ச)** | – | பெருங்காயம் |
| **அகோச்சரம் (ச)** | – | புலனுக்கு எட்டாதது |
| **அகோரம்[1] (ச)** | – | அழகின்மை |
| **அகோரம்[2] (ச)** | – | மிகு கொடுமை |
| **அகோடம் (ச)** | – | கமுகமரம் |
| **அகோத்திரம் (ச)** | – | தீய குலம் |
| **அகௌரவம் (ச)** | – | அவமதிப்பு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அங்காஈனம் (ச)** | – | அங்கஹீனம் பார்க்க |
| **அங்காஈனன் (ச)** | – | அங்கஹீனன் பார்க்க |
| **அங்ககணிதம் (ச+த)** | – | எண்கணிதம் |
| **அங்ககீனம் (ச)** | – | அங்கஹீனம் பார்க்க |
| **அங்கசங்கம் (ச)** | – | புணர்ச்சி |
| **அங்க சாசனம் (ச)** | – | அடையாளம் |
| **அங்கசேட்டை (ச)** | – | அங்கசேஷ்டை பார்க்க |
| **அங்கசேஷ்டை (ச)** | – | உறுப்பசைப்பு |
| **அங்கத்தவர் (ச)** | – | அவை உறுப்பினர் |
| **அங்கத்தினர் (ச)** | – | உறுப்பினர் |
| **அங்கதாரி (ச)** | – | சிவன் |
| **அங்கப் பிரதட்சிணம் (ச)** | – | உடலுருளும் வழிபாடு |
| **அங்கம்[1] (ச)** | – | உறுப்பு, உடல் |
| **அங்கம்[2] (ச)** | – | அடையாளம், இடம் |
| **அங்கம் வகி (ச)** | – | பங்குபெறு |
| **அங்கலக்கணம் (ச+த)** | – | உடல் அழகு |
| **அங்கலாய் (ச)** | – | புலம்பு |
| **அங்கலாய்ப்பு (ச)** | – | மனக்குறை, வருத்தம் |
| **அங்கயோகம் (ச)** | – | எண் வகை ஓகம் |
| **அங்கவத்திரம் (ச)** | – | அங்கவஸ்திரம் பார்க்க |
| **அங்கவஸ்திரம் (ச)** | – | மேலாடை, மெய்யுடை |
| **அங்கவித்திகை (ச)** | – | கணக்கு |
| **அங்கவியல் (ச+த)** | – | உறுப்பிலக்கணம் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அங்கனை (ச)** | – | பெண் |
| **அங்கஹீனம் (ச)** | – | உறுப்புக்குறை |
| **அங்கஹீனன் (ச)** | – | உறுப்புக்கேடன் |
| **அங்காரகம்[1] (ச)** | – | மனக்கவலை |
| **அங்காரகம்[2] (ச)** | – | தீ, நெருப்பு |
| **அங்காரகன் (ச)** | – | செவ்வாய்க் கோள் |
| **அங்காரன் (ச)** | – | அங்காரகன் பார்க்க |
| **அங்கி (ச)** | – | நீள் சட்டை, நெட்டுடை |
| **அங்கிசம் (ச)** | – | ஒதிமம், எகினம் |
| **அங்கித் தேவன் (ச)** | – | நெருப்பிறை |
| **அங்கிரகம் (ச)** | – | உடல் நோவு |
| **அங்கிரி (ச)** | – | மரவேர் |
| **அங்கீகரணம் (ச)** | – | உடன்படுகை |
| **அங்கீகரி (ச)** | – | உடன்படு, ஏற்றுக்கொள் |
| **அங்கீகரித்தல் (ச)** | – | ஏற்றுக்கொள்ளுதல் |
| **அங்கீகாரம் (ச)** | – | ஏற்பிசைவு |
| **அங்கீகிருதம் (ச)** | – | ஏற்றுக்கொள்ளப்பட்டது |
| **அங்குச முத்திரை (ச)** | – | துரட்டி முத்திரை |
| **அங்குட்டம்[1] (ச)** | – | திறவுகோல் |
| **அங்குட்டம்[2] (ச)** | – | கட்டைவிரல் |
| **அங்குட்டம்[3] (ச)** | – | துரட்டி |
| **அங்குரம் (ச)** | – | முளை |
| **அங்குரார்ப்பணம் (ச)** | – | முளை விதைத் தெளிப்பு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அங்குரி (ச)** | – | கைவிரல் |
| **அங்குலம் (ச)** | – | விரலம் |
| **அங்குலி (ச)** | – | தும்பிக்கை நுனி |
| **அங்குலிகம் (ச)** | – | அங்குலியம் பார்க்க |
| **அங்குலித்திரம் (ச)** | – | விரலுறை |
| **அங்குலியம் (ச)** | – | மோதிரம் |
| **அங்குஸ்தான் (உ)** | – | துன்னக்காரனின் விரலுறை |
| **அச்சரம் (ச)** | – | வரிவடிவம் |
| **அச்சவாரம் (ச)** | – | அச்சாரம் பார்க்க |
| **அச்சா (உ)** | – | நன்று, நல்லது |
| **அச்சாரம் (ச)** | – | முன்பணம் |
| **அச்சாறு (ச)** | – | ஊறுகாய் |
| **அச்சானம் (ச)** | – | அஞ்ஞானம் பார்க்க |
| **அச்சானியம் (ச)** | – | அமங்கலம் |
| **அச்சிக்குதிரை (ச)** | – | அயல்நாட்டுக் குதிரை |
| **அச்சிரம் (ச)** | – | முன்பனிக் காலம் |
| **அச்சுதன் (ச)** | – | திருமால் |
| **அச்சுதை (ச)** | – | மலைமகள் |
| **அச்சுவாகனம் (த+ச)** | – | அச்சுக்கருவி |
| **அசகாய சூரன் (ச)** | – | பெருவீரன் |
| **அசகாயம் (ச)** | – | துணை வேண்டாமை |
| **அசங்கதம் (ச)** | – | ஒழுங்கின்மை |
| **அசங்கமம் (ச)** | – | ஒற்றுமையின்மை |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அசங்கன் (ச)** | – | பற்றற்றவன் |
| **அசங்கியம்[1] (ச)** | – | எண்ணற்றது |
| **அசங்கியம்[2] (ச)** | – | அருவருப்பு |
| **அசங்கியன் (ச)** | – | இயலாதவன் |
| **அசஞ்சலம்[1] (ச)** | – | அசைவற்றது |
| **அசஞ்சலம்[2] (ச)** | – | உறுதியானது |
| **அசட்டன் (ச)** | – | கீழ்மகன் |
| **அசட்டை (ச)** | – | கவனமின்மை, பாராமுகம் |
| **அசடன் (ச)** | – | குற்றமுடையவன் |
| **அசடி (ச)** | – | பேதை |
| **அசடு (ச)** | – | பேதைமை |
| **அசடு தட்டுதல் (ச+த)** | – | பொலிவு அழிதல் |
| **அசடு வழிதல் (ச+த)** | – | அறியாமை பெருகுதல் |
| **அசத்தன் (ச)** | – | வலுவிலி |
| **அசத்தியம் (ச)** | – | பொய் |
| **அசத்து[1] (ச)** | – | பிறரை வியக்கச்செய் |
| **அசத்து[2] (ச)** | – | இல்லாதது, பொய்ந்நெறி |
| **அசத்துரு (ச)** | – | நண்பன் |
| **அசதி (ச)** | – | அயர்ச்சி |
| **அசதிக் கிளவி (ச+த)** | – | பகடிச்சொல் |
| **அசதியாடுதல் (ச)** | – | பகடியாடல் |
| **அசதம் (ச)** | – | காற்று |
| **அசந்தர்ப்பம் (ச)** | – | ஏலாக்காலம் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அசப்பியம் (ச)** | – | அவையல்கிளவி |
| **அசம்[1] (ச)** | – | ஆடு |
| **அசம்[2] (ச)** | – | பிறவாததது |
| **அசம்[3] (ச)** | – | சந்தம் |
| **அசம்பவம்[1] (ச)** | – | வெறுமை |
| **அசம்பவம்[2] (ச)** | – | பிறவாமை |
| **அசம்பாவிதம் (ச)** | – | நேரக்கூடாதது |
| **அசம்மதம் (ச)** | – | உடன்பாடின்மை |
| **அசமஞ்சன் (ச)** | – | கொடியவன் |
| **அசமந்தம்[1] (ச)** | – | மந்தகுணம் உடையவன் |
| **அசமந்தம்[2] (ச)** | – | தொடர்பின்மை |
| **அசமானம் (ச)** | – | இணையற்றது |
| **அசமுகன் (ச)** | – | ஆட்டுமுகமுடையவன் |
| **அசமுகி (ச)** | – | ஆட்டு முகத்தி |
| **அசரணம் (ச)** | – | புகலின்மை |
| **அசரீரன் (ச)** | – | உடம்பிலி |
| **அசரீரி (ச)** | – | உருவிலி குரல் |
| **அசல்[1] (உ)** | – | மூலம் |
| **அசல்[2] (உ)** | – | உயர்ந்தது, தரமானது |
| **அசல்பிரதி (உ+ச)** | – | மூலப்படி |
| **அசலம்[1] (ச)** | – | மலை |
| **அசலம்[2] (ச)** | – | அசையாதது |
| **அசலம்[3] (ச)** | – | ஆப்பு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அசலம்[4] (ச)** | – | கனிம நஞ்சு |
| **அசலனம் (ச)** | – | அசைவின்மை |
| **அசல லிங்கம் (ச)** | – | கோபுர உச்சி |
| **அசலன் (ச)** | – | அசைவிலி |
| **அசலை[1] (ச)** | – | நிலவுலகம் |
| **அசலை[2] (ச)** | – | அசையாதது |
| **அசற்காரியம் (ச)** | – | தகாத செய்கை |
| **அசன் (ச)** | – | பிறப்பில்லாதவன் |
| **அசனம் (ச)** | – | உணவு, சோறு |
| **அசனவேதி (ச)** | – | சீரகம் |
| **அசனி (ச)** | – | தீச்சட்டி |
| **அசாகசம் (ச)** | – | அமைதி |
| **அசாத்தியம் (ச)** | – | செயற்கரியது, அருஞ்செயல் |
| **அசாத்தியரோகம் (ச)** | – | தீரா நோய் |
| **அசாதசத்ரு (ச)** | – | அஜாதசத்ரு பார்க்க |
| **அசாதாரணம் (ச)** | – | சிறப்பானது |
| **அசாதி (ச)** | – | செவ்வாய் |
| **அசாதுரியம் (ச)** | – | சொல்திறமின்மை |
| **அசாரம்[1] (ச)** | – | சாரமற்றது |
| **அசாரம்[2] (ச)** | – | பயனற்றது |
| **அசாரம்[3] (ச)** | – | ஆமணக்கு |
| **அசி[1] (ச)** | – | படைக்கருவி |
| **அசி[2] (ச)** | – | ஏளனச்சிரிப்பு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
| --- | --- | --- |
| **அசிகை[1] (ச)** | – | நகைமொழி |
| **அசிகை[2] (ச)** | – | பொறாமை |
| **அசிங்கம்[1] (ச)** | – | அருவருப்பு |
| **அசிங்கம்[2] (ச)** | – | மாசு |
| **அசித்திரன் (ச)** | – | கள்வன் |
| **அசித்து (ச)** | – | அழிவில் பொருள் |
| **அசிதம்[1] (ச)** | – | கருமை |
| **அசிதம்[2] (ச)** | – | வெல்லக் கூடாதது |
| **அசிதம்[3] (ச)** | – | சிரிப்பது |
| **அசிதன்[1] (ச)** | – | திருமால் |
| **அசிதன்[2] (ச)** | – | காரி |
| **அசிரத்தை (ச)** | – | கவனிப்பின்மை |
| **அசீரணம் (ச)** | – | செரியாமை |
| **அசுகம் (ச)** | – | நலமின்மை |
| **அசுத்தம் (ச)** | – | தூய்மையின்மை |
| **அசுத்தன் (ச)** | – | தூய்மையில்லாதவன் |
| **அசுத்தாவி (ச)** | – | தீய ஆவி |
| **அசுத்தை (ச)** | – | ஒழுக்கமற்றவள் |
| **அசுதை (ச)** | – | நஞ்சு |
| **அசுபக்கிரகம் (ச)** | – | தீக்கோள் |
| **அசுபக்கிரியை (ச)** | – | அன்மங்கலச் செயல் |
| **அசுபம்[1] (ச)** | – | மங்கலமின்மை |
| **அசுபம்[2] (ச)** | – | தீமை, கரிசு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அசும்புசெய்தல் (ச+த)** | – | வழுக்குதல் |
| **அசுமம் (ச)** | – | இடியேறு |
| **அசுரம் (ச)** | – | மறஞ்செய்து மணம்புரிகை |
| **அசுரவாத்தியம் (ச)** | – | முரசு |
| **அசுரவைத்தியம் (ச)** | – | அறுவை மருத்துவம் |
| **அசுரவேகம் (ச)** | – | மிகவிரைவு |
| **அசுரன் (ச)** | – | அரக்கன் |
| **அசுவகந்தி (ச)** | – | அமுக்கராக் கிழங்கு |
| **அசுவசட்டிரம் (ச)** | – | நெருஞ்சிமுள் |
| **அசுவசாஸ்திரம் (ச)** | – | பரிநூல் |
| **அசுவந்தம்[1] (ச)** | – | சாவு |
| **அசுவந்தம்[2] (ச)** | – | வயல் |
| **அசுவந்தம்[3] (ச)** | – | அடுப்பு |
| **அசுவம் (ச)** | – | குதிரை |
| **அசுவமேதயாகம் (ச)** | – | பரிவேள்வி |
| **அசுவினி (ச)** | – | முதல் நாண்மீன் |
| **அசுனம் (ச)** | – | வெள்ளுள்ளி |
| **அசூதி (ச)** | – | மலடு, பிறப்பின்மை |
| **அசூயை[1] (ச)** | – | அருவருப்பு |
| **அசூயை[2] (ச)** | – | பொறாமை |
| **அசூரி (ச)** | – | பெரியம்மை நோய் |
| **அசேதனம்[1] (ச)** | – | அறிவின்மை |
| **அசேதனம்[2] (ச)** | – | அறிவிலி |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அசேஷம் (ச)** | – | முழுதும் |
| **அசோகம் (ச)** | – | கவலையின்மை |
| **அசோகன் (ச)** | – | துயரிலி |
| **அசோகு[1] (ச)** | – | பிண்டிமரம் |
| **அசோகு[2] (ச)** | – | நலம் |
| **அசௌக்கியம் (ச)** | – | நலக்கேடு |
| **அசௌகரியம் (ச)** | – | ஏந்தின்மை, வசதியின்மை |
| **அஸ்தமனம் (ச)** | – | மறைதல் |
| **அஞ்சபாதம் (ச)** | – | புல்லடிக்குறி |
| **அஞ்சம்[1] (ச)** | – | வெள்ளருகு |
| **அஞ்சம்[2] (ச)** | – | உயிர்வளி |
| **அஞ்சன் (ச)** | – | திருமால் |
| **அஞ்சனகேசி (ச)** | – | கருங்கூந்தல் |
| **அஞ்சனம் (ச)** | – | கண்மை |
| **அஞ்சனவுருவன் (ச+த)** | – | திருமால் |
| **அஞ்சனாச்சி (ச)** | – | மைவிழியாள் |
| **அஞ்சிட்டன் (ச)** | – | கதிரவன் |
| **அஞ்சுகம் (ச)** | – | மேலாடை |
| **அஞ்ஞத்துவம் (ச)** | – | அறியாமை |
| **அஞ்ஞன் (ச)** | – | அறிவிலி |
| **அஞ்ஞனம் (ச)** | – | அஞ்சனம் பார்க்க |
| **அஞ்ஞாதவாசம் (ச)** | – | கரந்துறைவு |
| **அஞ்ஞானம்[1] (ச)** | – | புறச்சமயம் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அஞ்ஞானம்[2] (ச)** | – | அறியாமை |
| **அஞ்ஞானி (ச)** | – | மெய்நெறியறியாதவன் |
| **அஞ்ஞை (ச)** | – | அறிவிலி |
| **அட்சதை (ச)** | – | மங்கலஅரிசி |
| **அட்சம் (ச)** | – | அக்ஷம் பார்க்க |
| **அட்சமாலை (ச)** | – | உருத்திராக்க மாலை |
| **அட்சய பாத்திரம் (ச)** | – | இரப்போர் கலம் |
| **அட்சயம் (ச)** | – | கேடின்மை |
| **அட்சயன்[1] (ச)** | – | கடவுள் |
| **அட்சயன்[2] (ச)** | – | கேடிலி |
| **அட்சரசுத்தி (ச)** | – | திருத்தக் கையெழுத்து |
| **அட்சரப்புல் (ச+த)** | – | சளிப்புல் |
| **அட்சரம் (ச)** | – | எழுத்து |
| **அட்சரசீவிகன் (ச)** | – | எழுத்தாளன் |
| **அட்சரதோஷம் (ச)** | – | எழுத்துப்பிழை |
| **அட்சரமுகன் (ச)** | – | மாணாக்கன் |
| **அட்சராப்பியாசம் (ச)** | – | எழுத்துப் பயிற்சி |
| **அட்சரேகை (ச)** | – | நிலக்கிடைக்கோடு |
| **அட்சி (ச)** | – | கண் |
| **அட்டகாசம்[1] (ச)** | – | ஆர்ப்பாட்டம் |
| **அட்டகாசம்[2] (ச)** | – | பெருஞ் சிரிப்பு |
| **அட்டகிரி (ச)** | – | எட்டுமலை |
| **அட்டகுணம் (ச+த)** | – | எண்குணம் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அட்டாளகம் (ச)** | – | மேல்மாடி |
| **அட்டாளிகை (ச)** | – | மேல்மாடி |
| **அட்டாளை (ச)** | – | காவல் பரண் |
| **அட்டி (ச)** | – | மிகயினிமை |
| **அட்டைப்பிரயோகம் (த+ச)** | – | உறிஞ்சு மருத்துவம் |
| **அட்டைவிதி (த+ச)** | – | உறிஞ்சு மருத்துவமுறை |
| **அடனி (ச)** | – | வில்நுனி |
| **அடாநிந்தை (த+ச)** | – | கொடும்பழி |
| **அடாலத்து (உ)** | – | நயன்மன்றம், அறமன்றம் |
| **அடாவடி (அ)** | – | கடுமுரண்டு |
| **அடிநாதம் (த+ச)** | – | உள்ளடக்க அடிப்படை |
| **அடிமைப் பத்திரம் (த+ச)** | – | ஆளோலை |
| **அடிஸ்தானம் (த+ச)** | – | அடிமனை |
| **அண்டகம் (ச)** | – | விதை, கொட்டை |
| **அண்டகோசம் (ச)** | – | விதைப்பை, கருப்பை |
| **அண்டசம் (ச)** | – | முட்டையிற் பிறந்தது |
| **அண்டகை (ச)** | – | மான்மதம் |
| **அண்டத்தைலம் (ச+த)** | – | கோழிமுட்டை நெய்மம் |
| **அண்டப்புரட்டன் (ச)** | – | பெருமோசக்காரன் |
| **அண்டப்புளுகன் (ச)** | – | பெரும்பொய்யன் |
| **அண்டபகிரண்டம் (ச)** | – | உலகமும் கோள்களும் |
| **அண்டபௌத்திரம் (ச)** | – | விதைமூல நோய் |
| **அண்டம்[1] (ச)** | – | முட்டை, உலகம், விதை |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
| --- | --- | --- |
| **அண்டம்[2] (ச)** | – | வான், பெருவெளி, புடவி |
| **அண்டயோனி (ச)** | – | முட்டையில் பிறக்கும் உயிர் |
| **அண்டர் (ச)** | – | வானோர், தேவர் |
| **அண்டரசம் (ச)** | – | இதளியம் |
| **அண்டவாணர் (ச+த)** | – | அண்டர் பார்க்க |
| **அண்டவாதம் (ச)** | – | குடலிறக்கம் |
| **அண்டவிருத்தி (ச)** | – | விதை வீக்கம் |
| **அண்டவீக்கம் (ச+த)** | – | விதைவீக்கம் |
| **அண்டன் (ச)** | – | கடவுள் |
| **அண்டஜம் (ச)** | – | அண்டயோனி பார்க்க |
| **அண்டா (ச)** | – | வாயகன்ற பெருங்கலம் |
| **அண்ணை (ச)** | – | அறிவிலி |
| **அணு (ச)** | – | மந்திரம் |
| **அணுகன் (ச)** | – | எளியன் |
| **அணுத்துவம் (ச)** | – | நுண்மை |
| **அணுபை (ச)** | – | மின்னல் |
| **அணுவிரதம் (ச)** | – | அணுநோன்பு |
| **அத்தகடகம் (ச)** | – | கைக்கடகம் |
| **அத்தகம்[1] (ச)** | – | ஆமணக்கு |
| **அத்தகம்[2] (ச)** | – | கணக்கன் |
| **அத்தகானி (ச)** | – | பொருட்கேடு |
| **அத்தகிரி (ச)** | – | மேற்கு மலை |
| **அத்தம்[1] (ச)** | – | கண்ணாடி |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அத்தம்$^{2}$ (ச)** | – | ஆண்டு |
| **அத்தம்$^{3}$ (ச)** | – | கை |
| **அத்தம்$^{4}$ (ச)** | – | தும்பிக்கை |
| **அத்தம்$^{5}$ (ச)** | – | மயிர்க் கற்றை |
| **அத்தமம் (ச)** | – | பொழுதுசாய்கை |
| **அத்தர் (உ)** | – | நறுமணத்தி |
| **அத்தன் (பி)** | – | தகப்பன், மூத்தோன் |
| **அத்தவாளம் (ச+ம)** | – | மேலாடை |
| **அத்தாட்சி (ச)** | – | சான்று |
| **அத்தாணி$^{1}$ (ச)** | – | ஓலக்க மண்டபம் |
| **அத்தாணி$^{2}$ (ச)** | – | உட்கமுக்கம் |
| **அத்தாணிச் சேவகம் (பி)** | – | அரசப் பணிவிடை |
| **அத்தாந்தரம்$^{1}$ (ச)** | – | தொங்கல் நிலை |
| **அத்தாந்தரம்$^{2}$ (ச)** | – | துணையிலாக் கட்டிடர் |
| **அத்தானம் (ச)** | – | கோபுரவாயில் |
| **அத்தி$^{1}$ (ச)** | – | கடல் |
| **அத்தி$^{2}$ (ச)** | – | இரவலன் |
| **அத்தி$^{3}$ (ச)** | – | அஸ்தி பார்க்க |
| **அத்தி$^{4}$ (ச)** | – | யானை |
| **அத்தி$^{5}$ (ச)** | – | பொய்கை |
| **அத்தி$^{6}$ (ச)** | – | ஆசை |
| **அத்திக்கூடம் (ச+த)** | – | யானைக் கொட்டில் |
| **அத்தித்தந்தம் (ச)** | – | முள்ளங்கி |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அத்திநகம் (ச)** | – | வாயிற் படிச்சுருள் |
| **அத்தியக்கன் (ச)** | – | தலைவன் |
| **அத்தியட்சகர் (ச)** | – | கண்காணி |
| **அத்தியட்சம் (ச)** | – | காண்டல் அளவை |
| **அத்தியந்தம்[1] (ச)** | – | மிகவும் |
| **அத்தியந்தம்[2] (ச)** | – | அறவே |
| **அத்தியந்தா பாவம் (ச)** | – | முழுது மின்மை |
| **அத்தியாயம் (ச)** | – | நூலின் பிரிவு, படலம் |
| **அத்தியாவசியம் (ச)** | – | கட்டாயத் தேவை |
| **அத்தியாளி (ச+த)** | – | யானையாளி |
| **அத்திரம்[1] (ச)** | – | கைவிடு படை |
| **அத்திரம்[2] (ச)** | – | மலை |
| **அத்திரம்[3] (ச)** | – | வில் |
| **அத்திரயூகம் (ச)** | – | வில்லுருப்படை வகுப்பு |
| **அத்திரி[1] (ச)** | – | மலை |
| **அத்திரி[2] (ச)** | – | அம்பு |
| **அத்திரி[3] (ச)** | – | கதிரவன் |
| **அத்திரிச்சாரம் (ச)** | – | இரும்பு |
| **அத்திவாரம் (ச)** | – | அஸ்திவாரம் பார்க்க |
| **அத்தினி (ச)** | – | பெண்யானை |
| **அத்து (ச)** | – | எல்லை, வரம்பு |
| **அத்து மீறு (ச+த)** | – | எல்லைகட, வரம்பு மீறு |
| **அத்துவானம் (ச)** | – | பாழிடம், பாழுங்காடு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அத்வைதம் (ச)** | – | இரண்டன்மை |
| **அத்துவைதம் (ச)** | – | அத்வைதம் பார்க்க |
| **அதப்பு (உ)** | – | மதிப்பு, அச்சம் |
| **அதம்[1] (ச)** | – | அழிப்பு |
| **அதம்[2] (ச)** | – | கீழுலகம் |
| **அதமபட்சம் (ச)** | – | குறைந்தளவு |
| **அதமம் (ச)** | – | குறைவு |
| **அதர்மம் (ச)** | – | அறமல்லாதது, அறக்கேடு |
| **அதர்வணம் (ச)** | – | தீமறை |
| **அதரம்[1] (ச)** | – | கீழ் |
| **அதரம்[2] (ச)** | – | உதடு |
| **அதலகுதலம் (ச)** | – | பெருங்குழப்பம் |
| **அதலம்[1] (ச)** | – | கீழ் முதலுலகம் |
| **அதலம்[2] (ச)** | – | கீழுலகம் |
| **அதன்மம் (ச)** | – | அதர்மம் பார்க்க |
| **அதன்மர் (ச)** | – | கீழ்மக்கள் |
| **அதன்மி (ச)** | – | அறக்கேடன் |
| **அதனப்பிரசங்கி (ச)** | – | அதிகப்பிரசங்கி பார்க்க |
| **அதனம் (ச)** | – | மிகுதி |
| **அதாலத்து (உ)** | – | நயன்மன்றம் |
| **அதிகப்பிரசங்கம் (த+ச)** | – | வாயாடித்தனம் |
| **அதிகப்பிரசங்கி (த+ச)** | – | வளவளத்த பேச்சாளி |
| **அதிகபட்சம் (த+ச)** | – | பேரெல்லை |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அதிகாசம் (த+ச)** | – | பெருஞ்சிரிப்பு |
| **அதிகாரப் பத்திரிக்கை (த+ச)** | – | உத்தரவுச்சீட்டு |
| **அதிகாலங்காரம் (ச)** | – | பெருமையணி |
| **அதிசயம் (ச)** | – | வியப்பு, வியக்கத்தக்கது |
| **அதிசயி (ச)** | – | வியப்படை |
| **அதிசரம் (ச)** | – | நெட்டுயிர்ப்பு |
| **அதிசீக்கிரம் (த+ச)** | – | மிகு விரைவு |
| **அதிதி[1] (ச)** | – | விருந்தினன் |
| **அதிதி[2] (ச)** | – | வையகன் |
| **அதிதி[3] (ச)** | – | மலைமகள் |
| **அதிதிபூசை (த+ச)** | – | விருந்தோம்பல் |
| **அதிபதி (ச)** | – | தலைவன் |
| **அதிபர் (ச)** | – | தலைவர் |
| **அதிபன் (ச)** | – | அதிபர் பார்க்க |
| **அதிமதுரம்[1] (த+ச)** | – | மிக இனிமை |
| **அதிமதுரம்[2] (த+ச)** | – | சாற்றுப்பூடு |
| **அதியன் (ச)** | – | மேற்பட்டவன் |
| **அதிர்ஷ்டக்காரன் (ச+த)** | – | ஆகூழன் |
| **அதிர்ஷ்டசாலி (ச+த)** | – | நற்பேறு பெற்றவர் |
| **அதிர்ஷ்டம் (ச)** | – | நற்பேறு, ஆகூழ் |
| **அதிரசம் (த+ச)** | – | மிகு சுவையம் |
| **அதிராசன் (ச)** | – | பேரரசன் |
| **அதிருப்தி (ச)** | – | மனநிறைவின்மை |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அதிருஷ்டானுகூலம் (ச)** | – | நற்காலப்பயிர் |
| **அதிரோகம் (த+ச)** | – | என்புருக்கிநோய் |
| **அதிவாதம் (த+ச)** | – | புனைந்துரை |
| **அதிவிருத்தம் (த+ச)** | – | வரம்பு மீறல் |
| **அதிஷ்டானம்[1] (ச)** | – | நிலைக்களம் |
| **அதிஷ்டானம்[2] (ச)** | – | இருக்கை |
| **அதீதம் (ச)** | – | மிதமிஞ்சியது |
| **அதீதர் (ச)** | – | முனிவர் |
| **அதீதியம் (ச)** | – | ஆசையின்மை |
| **அதீனம்[1] (ச)** | – | வயம், வசம் |
| **அதீனம்[2] (ச)** | – | உரிமை |
| **அதுலம் (ச)** | – | ஒப்பற்றது |
| **அதுலன் (ச)** | – | ஒப்பற்றவன் |
| **அதுலிதம் (ச)** | – | அசைவின்மை |
| **அதைரியம் (ச)** | – | துணிவின்மை |
| **அதோகதி (ச)** | – | தாழ்நிலை |
| **அந்தக்கரணசாட்சி (ச)** | – | மனச்சான்று |
| **அந்தக்கரணம் (ச)** | – | உடன்புலன்கள் |
| **அந்தக்கேடு (ச+த)** | – | சீர்கேடு |
| **அந்தகன்[1] (ச)** | – | அழிப்பவன் |
| **அந்தகன்[2] (ச)** | – | குருடன் |
| **அந்தகாரம் (ச)** | – | காரிருள், அறியாமை |
| **அந்தகாரி (ச)** | – | சிவபெருமான் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அந்தப்புரம் (ச)** | – | மகளிர் உறைவிடம் |
| **அந்தம்[1] (ச)** | – | அழகு |
| **அந்தம்[2] (ச)** | – | முடிவு, இறுதி, ஈறு |
| **அந்தம்[3] (ச)** | – | குருட்டுத்தன்மை |
| **அந்தம்[3] (ச)** | – | அறியாமை |
| **அந்தம்[4] (ச)** | – | கமுக்கம் |
| **அந்தர் தர்பார் (ச+உ)** | – | நயனினடை அரசாட்சி |
| **அந்தர்த்தானம் (ச)** | – | மறைகை |
| **அந்தர்ப்பூதம் (ச)** | – | உள்ளடங்கியது |
| **அந்தர்முகம் (ச+த)** | – | உள்நோக்குகை |
| **அந்தரங்கத் தியானி (ச)** | – | ஆமை |
| **அந்தரங்கம் (ச)** | – | மறைசெய்தி, மறைநிலை |
| **அந்தரங்கன்(ச)** | – | உற்ற நண்பன் |
| **அந்தரசாரி (ச)** | – | வானுலவி |
| **அந்தரடி (ச)** | – | தலைகீழாகப் பாய் |
| **அந்தரத்தில் நில் (ச+த)** | – | உதவியின்றி நில் |
| **அந்தரப்படு (ச+த)** | – | பெருந்துன்பப் படு |
| **அந்தரம்[1] (ச)** | – | வெளியிடம், வான்வெளி |
| **அந்தரம்[2] (ச)** | – | முடிவு |
| **அந்தரம்[3] (ச)** | – | தெய்வ உலகம் |
| **அந்தர வனம் (ச)** | – | ஆளில்லாக்காடு |
| **அந்தரவீச்சு (ச)** | – | பெரும்பொய் |
| **அந்தரவுலகம் (ச+த)** | – | துறக்கம் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அந்தராத்மா (ச)** | – | உள்மனம், உளச்சான்று |
| **அந்தராயம் (ச)** | – | இடையூறு |
| **அந்தராளம் (ச)** | – | இடைப்பட்ட இடம் |
| **அந்தராளமண்டபம் (ச+த)** | – | கருவறையடுத்த மண்டபம் |
| **அந்தரான்மா (ச)** | – | அந்தராத்மா பார்க்க |
| **அந்தரிட்சம் (ச)** | – | துறக்கம் |
| **அந்தரிதம் (ச)** | – | எச்சம் |
| **அந்தரிந்திரியம் (ச)** | – | உள்மனவிருக்கை |
| **அந்தரியாகப்பூசை (ச+த)** | – | மனத்து வழிபாடு |
| **அந்தரியாமி (ச)** | – | கடவுள் |
| **அந்தரேணம் (ச)** | – | நடுவிடம் |
| **அந்தளம் (ச)** | – | சிவிகை, பல்லக்கு |
| **அந்தன்[1] (ச)** | – | குருடன் |
| **அந்தன்[2] (ச)** | – | அழகன் |
| **அந்தஸ்து[1] (ச)** | – | மதிப்பு, தகுதி |
| **அந்தஸ்து[2] (ச)** | – | தகுதிப்பாடு |
| **அந்தாதி (ச)** | – | ஈறு தொடங்கி |
| **அந்தாஜ் (உ)** | – | மதிப்பு |
| **அந்தாஜ் கட்டு (உ+த)** | – | மதிப்பிடு |
| **அந்தாஜ் பட்டி (உ+த)** | – | பயிரின் விலை மதிப்பீடு |
| **அந்திமக் காலம் (ச+த)** | – | சாகுங்காலம் |
| **அந்திமக் கிரியை (ச)** | – | இறுதிச்சடங்கு |
| **அந்திமம் (ச)** | – | இறப்பு வேளை |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அந்நியம் (ச)** | – | அயல், வேறு, பிறிது |
| **அந்நியன் (ச)** | – | வேற்றவன், அயலான் |
| **அந்நியோன்யம் (ச)** | – | நெருக்கம் |
| **அநயம்[1] (ச)** | – | தீவினை |
| **அநயம்[2] (ச)** | – | ஏதம், பேரிடர் |
| **அநாசாரம் (ச)** | – | தீ நடத்தை |
| **அநாதரட்சகன் (ச)** | – | ஏதிலியர்க்கருளி |
| **அநாதி[1] (ச)** | – | பிறப்பற்றது |
| **அநாதி[2] (ச)** | – | பழைமை |
| **அநாதை (ச)** | – | திக்கற்றவன், ஏதிலி |
| **அநாமதேயம் (ச)** | – | பெயரற்றது |
| **அநாமதேயன் (ச)** | – | பெயரற்றவன் |
| **அநாமிகை (ச)** | – | மோதிரவிரல் |
| **அநாயம் (ச)** | – | வீண் |
| **அநாயாசம் (ச)** | – | வருத்தமின்மை |
| **அநாவசியம் (ச)** | – | தேவையற்றது |
| **அநித்தியம் (ச)** | – | நிலையற்றது |
| **அநிதம் (ச)** | – | அளவற்றது |
| **அநியாயம் (ச)** | – | அன்முறை, முறையின்மை |
| **அநிருத்தம் (ச)** | – | மெய்ப்பிக்கப்பெறாதது |
| **அநீதி (ச)** | – | நேர்மைக் கேடு |
| **அநுகூலம் (ச)** | – | நன்மை, ஏந்து, சார்பு |
| **அநுகூலி (ச)** | – | நன்மை செய்பவன் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அநுசயம் (ச)** | – | கழிவிரக்கம் |
| **அநுசரணம் (ச)** | – | சார்ந்தொழுகல் |
| **அநுசரணை (ச)** | – | ஒத்திசைவு |
| **அநுசரி (ச)** | – | பின்பற்று, ஒத்துப்போ |
| **அநுசரிப்பு (ச)** | – | பின்பற்றுகை, இணக்கம் |
| **அநுசாகை (ச)** | – | குறுங்கிளை |
| **அநுசாசனம் (ச)** | – | அறிவுரை |
| **அநுசாரி (ச)** | – | பின்பற்றுவோன் |
| **அநுசிதம் (ச)** | – | தகாதது, பொய் |
| **அநுதாபம் (ச)** | – | இரக்கம் |
| **அநுதினம் (ச)** | – | நாள்தோறும் |
| **அநுநாசிகம் (ச)** | – | மெல்லெழுத்து |
| **அநுநாதம் (ச)** | – | எதிரொலி |
| **அநுபந்தம் (ச)** | – | பிற்சேர்க்கை |
| **அநுபல்லவி (ச)** | – | இடைநிலை, உடனெடுப்பு |
| **அநுபவ ஞானம் (ச+த)** | – | பட்டறிவு |
| **அநுபவம் (ச)** | – | பட்டறிவு, வினையறிவு |
| **அநுபவி (ச)** | – | மகிழ்வுடன் நுகர் |
| **அநுபானம்[1] (ச)** | – | கூட்டு மருந்து |
| **அநுபானம்[2] (ச)** | – | துணை மருந்து |
| **அநுபூதி (ச)** | – | உணர்ந்துபெறும் அறிவு |
| **அநுபோகம் (ச)** | – | துய்ப்பு, இன்ப நுகர்ச்சி |
| **அநுமதி (ச)** | – | ஒப்பு, இசை, உடன்படு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அநுமரணம் (ச)** | – | உடன்சாதல் |
| **அநுமானம்[1] (ச)** | – | உய்த்துணர்வு |
| **அநுமானம்[2] (ச)** | – | கருதலளவை |
| **அநுமானி (ச)** | – | கருது, உய்த்துணர் |
| **அநுவாதம் (ச)** | – | வழிமொழிவு |
| **அநுவுரு (ச+த)** | – | ஒத்தவுரு, இணையுரு |
| **அநேகம் (ச)** | – | பெரும்பான்மை |
| **அப்தம் (ச)** | – | ஓராண்டு |
| **அப்தபூர்த்தி (ச)** | – | ஆண்டு நிறைவு |
| **அப்பட்டம் (ச)** | – | கலப்பற்றது |
| **அப்பவர்க்கம் (த+ச)** | – | அப்பவகை |
| **அப்பியங்கம் (ச)** | – | எண்ணெய்த் தேய்ப்பு |
| **அப்பியம் (ச)** | – | வேள்வித் தீ உணா |
| **அப்பியஸி (ச)** | – | பழகு |
| **அப்பியாஸம் (ச)** | – | பயிற்சி |
| **அப்பியாஸி (ச)** | – | பயில்பவன் |
| **அப்பிரகம் (ச)** | – | காக்கைப்பொன் |
| **அப்பிரகாசம் (ச)** | – | விளக்கமின்மை |
| **அப்பிரசித்தம் (ச)** | – | வெளிப்படையாகாதது |
| **அப்பிரதட்சனம் (ச)** | – | இடப்பக்கம் வருகை |
| **அப்பிரத்தியட்சம் (ச)** | – | புலப்படாதது |
| **அப்பிரதானம் (ச)** | – | முதன்மையில்லாதது |
| **அப்பிரம் (ச)** | – | முகில் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அப்பிரமாணம் (ச)** | – | ஆணை அல்லாதது |
| **அப்பிராணி (ச)** | – | ஏதுமறியாதவன் |
| **அப்பிராமணன் (ச)** | – | போலிப் பார்ப்பான் |
| **அப்பிரியம் (ச)** | – | வெறுப்பான செயல் |
| **அபக்குவம்[1] (ச)** | – | பக்குவப்படாத நிலை |
| **அபக்குவம்[2] (ச)** | – | முதிராமை |
| **அபகரி (ச)** | – | கவர்ந்துசெல் |
| **அபகாரம் (ச)** | – | தீமை, கவர்கை |
| **அபகாரி (ச)** | – | தீமை செய்வோன் |
| **அபகீர்த்தி (ச)** | – | புகழ்க்கேடு, புகழின்மை |
| **அபங்கன் (ச)** | – | குறைவில்லாதவன் |
| **அபசகுனம் (ச)** | – | தீக்குறி |
| **அபசப்தம் (ச)** | – | வழூஉமொழி |
| **அபசரிதம் (ச)** | – | தீயொழுக்கம் |
| **அபசாரம்[1] (ச)** | – | பொல்லாங்கு |
| **அபசாரம்[2] (ச)** | – | மதிப்பிழந்த செயல் |
| **அபத்தம்[1] (ச)** | – | பொய்ப்பழி |
| **அபத்தம்[2] (ச)** | – | பொருத்தமற்றது |
| **அபத்தியம் (ச)** | – | பிழையுணவு |
| **அபதானம் (ச)** | – | பெருஞ்செயல் |
| **அபதேசம் (ச)** | – | கீர்த்தி, மிகுபுகழ் |
| **அபயகரம் (ச)** | – | காக்கும் கை |
| **அபயங்கொடு (ச+த)** | – | தஞ்சமடைய இடம் கொடு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அபயம் (ச)** | – | புகலிடம், அடைக்கலம் |
| **அபய முத்திரை (ச+த)** | – | அடைக்கலக் கைக்குறி |
| **அபயன்[1] (ச)** | – | அருகக் கடவுள் |
| **அபயன்[2] (ச)** | – | இடர்த் துணை இறைவன் |
| **அபரக்கிரியை (ச)** | – | இறுதிச்சடங்கு |
| **அபரஞ்சி (தெ)** | – | புடமிட்ட பொன் |
| **அபரபக்ஷம் (ச)** | – | தேய்பிறை |
| **அபரபுத்தி (ச)** | – | பின்னறிவு |
| **அபராதம் (ச)** | – | ஒறுப்புக் கட்டணம் |
| **அபராதி (ச)** | – | குற்றவாளி |
| **அபராஜிதன்[1] (ச)** | – | வெல்ல இயலாதவன் |
| **அபராஜிதன்[2] (ச)** | – | இறைவன் |
| **அபராஜிதை (ச)** | – | கொற்றவை |
| **அபரிமிதம் (ச)** | – | மிக அதிகம் |
| **அபலம் (ச)** | – | பயனின்மை |
| **அபலன் (ச)** | – | வலிமையற்றவன் |
| **அபலை[1] (ச)** | – | பெண், பேதை |
| **அபலை[2] (ச)** | – | வலுவில்லாதவள் |
| **அபவர்க்கம் (ச)** | – | வீடுபேறு |
| **அபவாக்கு (ச)** | – | தீ விளைவுச் சொல் |
| **அபவாதம் (ச)** | – | அவதூறு |
| **அபவிருத்தி (ச)** | – | குறைவு |
| **அபஸ்மாரம் (ச)** | – | கால்கை வலிப்பு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அபஸ்வரம் (ச)** | – | விலகி ஒலிக்கும் இசை |
| **அபாக்கியம் (ச)** | – | போகூழ் |
| **அபாண்டம் (ச)** | – | பெரும்பொய், வீண்பழி |
| **அபாயகரம் (ச)** | – | பேரேத நிலை |
| **அபாயதந்திரம் (ச)** | – | ஏமாற்றுந் திறவுத்தி |
| **அபாயச்சங்கிலி (ச)** | – | இடர்த்தொடரி |
| **அபாயச்சங்கு (ச+த)** | – | பேரிடர் ஒலிப்பான் |
| **அபாயம் (ச)** | – | பேரிடர், ஏதம், கேடு |
| **அபாரசக்தி (ச)** | – | பெரும் பேராற்றல் |
| **அபாரம் (ச)** | – | அளவின்மை, அருமை |
| **அபானம் (ச)** | – | எருவாய், குதம் |
| **அபானவாயு (ச)** | – | அபானன் பார்க்க |
| **அபானன் (ச)** | – | கீழ்நோக்கு வளி |
| **அபிதா (ச)** | – | சொல், மொழி |
| **அபிதானம்[1] (ச)** | – | பெயர் |
| **அபிதானம்[2] (ச)** | – | மறைவு |
| **அபிநயம் (ச+த)** | – | நளிநயம், மெய்ப்பாடு |
| **அபிநயன் (ச+த)** | – | நளிநயத்தன் |
| **அபிப்பிராய பேதம் (ச)** | – | கருத்து வேற்றுமை |
| **அபிப்பிராயம் (ச)** | – | கருத்து, நோக்கம் |
| **அபிமானம் (ச)** | – | அன்பு, தன்மதிப்பு |
| **அபிமானி[1] (ச)** | – | பற்றாளர் |
| **அபிமானி[2] (ச)** | – | ஆர்வமுடையவர் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அபியுக்தன் (ச)** | – | அறிஞன் |
| **அபிராமம் (ச)** | – | அழகானது |
| **அபிராமன் (ச)** | – | நெஞ்சுக்கினியன் |
| **அபிராமி (ச)** | – | மலைமகள், நல்லெழினி |
| **அபிலாசை (ச)** | – | அபிலாஷை பார்க்க |
| **அபிலாசம் (ச)** | – | விருப்பம் |
| **அபிலாஷை (ச)** | – | விருப்பம், விழைவு |
| **அபிவிருத்தி[1] (ச)** | – | மிகுவளர்ச்சி |
| **அபிவிருத்தி[2] (ச)** | – | முன்னேற்றம் |
| **அபின் (ச)** | – | போதைப்பொருள், கசினி |
| **அபினி (பா)** | – | அபின் பார்க்க |
| **அபிஷேகம் (ச)** | – | குட முழக்கு, திருமுழுக்கு |
| **அபூர்வம் (ச)** | – | அருமை, அரியது |
| **அபேட்சகர் (ச)** | – | வேட்பாளர் |
| **அபேட்சி (ச)** | – | விரும்பு |
| **அபேட்சிதம் (ச)** | – | விரும்பப்பட்டது |
| **அபேட்சை (ச)** | – | விருப்பம் |
| **அபேதம் (ச)** | – | வேற்றுமையின்மை |
| **அம்சம் (ச)** | – | கூறு, பகுதி, அழகு |
| **அம்பகம் (ச)** | – | கண் |
| **அம்பட்டன் (ச)** | – | மயிர்வினைஞன் |
| **அம்பணம் (ச)** | – | மரக்கால் |
| **அம்பரம்[1] (ச)** | – | வானம் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அம்பரம்$^{2}$ (ச)** | – | வஞ்சன் |
| **அம்பலி (உ)** | – | அம்பிலி பார்க்க |
| **அம்பாரம் (உ)** | – | தவசக் குவியல் |
| **அம்பாரி (உ)** | – | யானை மேலிருக்கை |
| **அம்பிகை (ச)** | – | அம்மை, காளி |
| **அம்பிலி (உ)** | – | முட்டைக்கரு |
| **அம்புதி (ச)** | – | கால்வாய் |
| **அம்புயம் (ச)** | – | தாமரை |
| **அம்புயன் (ச)** | – | நான்முகன் |
| **அம்புயை (ச)** | – | திருமகள் |
| **அம்புஜம் (ச)** | – | தாமரை |
| **அம்போசம் (ச)** | – | தாமரை |
| **அம்போதி (ச)** | – | கடல் |
| **அம்போருகம் (ச)** | – | தாமரை |
| **அம்மணம் (ச)** | – | ஆடையின்மை |
| **அமங்கலம் (ச)** | – | அன்மங்கலம் |
| **அமங்கலி (ச)** | – | கைம்பெண் |
| **அமரத்துவம் (ச)** | – | இறப்பின்மை |
| **அமரர் (ச)** | – | வானோர் |
| **அமரலோகம் (ச)** | – | தேவருலகம் |
| **அமரி (ச)** | – | அமுது |
| **அமருலகம் (ச)** | – | துறக்கம் |
| **அமரேசன் (ச)** | – | தேவர்கோன் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அமரோர் (ச)** | – | தேவர் |
| **அமல் (உ)** | – | செயற்பாடு, நடைமுறை |
| **அமலநாதன் (ச)** | – | மாசிலாநம்பி |
| **அமலம் (ச)** | – | அருநெல்லி |
| **அமலன் (ச)** | – | மாசிலான் |
| **அமலை (ச)** | – | மாசிலி |
| **அமாத்தியன் (ச)** | – | அமைச்சன் |
| **அமாவசியை (ச)** | – | அமாவாசை பார்க்க |
| **அமாவாசை (ச)** | – | காருவா |
| **அமித்திரன் (ச)** | – | பகைவன் |
| **அமிதம் (ச)** | – | அளவற்றது |
| **அமிர்தக்கலை (ச+த)** | – | நிலாக்கலை |
| **அமிர்தகுணம் (ச+த)** | – | உயர்குணம் |
| **அமிர்தசாகரம் (ச)** | – | பாற்கடல் |
| **அமிர்தயோகம் (ச)** | – | அமுதவோகம் |
| **அமிர்தப்பால் (ச+த)** | – | தாய்ப்பால் |
| **அமிர்தம்[1] (ச)** | – | தேவருணவு |
| **அமிர்தம்[2] (ச)** | – | இனிமை |
| **அமிர்தர் (ச)** | – | தேவர் |
| **அமிர்தவல்லி (ச)** | – | சீந்தில்கொடி |
| **அமிலம் (ச)** | – | புளிமம் |
| **அமீர் (உ)** | – | தலைவன், படைத்தலைவன் |
| **அமீன் (உ)** | – | தண்டலன் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அமீனா (உ)** | – | தண்டலன் |
| **அமூர்த்தன் (ச)** | – | உருவிலி, சிவன் |
| **அமுல் (உ)** | – | நடைமுறை |
| **அமுதகிரணன் (ச)** | – | நிலவு |
| **அமுதசுரபி (ச)** | – | அமுதவூற்று |
| **அமூர்த்தன் (ச)** | – | உருவிலி |
| **அமோகம் (ச)** | – | ஏராளம் |
| **அமோகன் (ச)** | – | காம மயக்கமிலி |
| **அயணம் (ச)** | – | செலவு |
| **அயம் (ச)** | – | இரும்பு |
| **அயிராவதன் (ச)** | – | தேவர்கோன் |
| **அயோக்கியதை (ச)** | – | தீய நடை |
| **அயோக்கியம் (ச)** | – | தகுதியற்றது |
| **அயோக்கியன் (ச)** | – | கயவன் |
| **அர்ச்சகன் (ச)** | – | பூசகன் |
| **அர்ச்சனை (ச)** | – | தொழுகை, வழிபாடு |
| **அர்ச்சித்தல் (ச)** | – | பூசித்தல் |
| **அர்ச்சுனன் (ச)** | – | வெள்ளையன் |
| **அர்த்த கோளம் (ச+த)** | – | பாதியுருண்டை |
| **அர்த்த சந்திரன் (ச)** | – | பிறைநிலா |
| **அர்த்த சம்பந்தம் (ச)** | – | சொத்துரிமை |
| **அர்த்த சாத்திரம் (ச)** | – | அரசியல் பொருளியல் நூல் |
| **அர்த்த சாமம் (ச)** | – | நள்ளிரவு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அர்த்தநாரீசுவரன் (ச)** | – | உமையொருபாகன் |
| **அர்த்தபிசகு (ச+த)** | – | பொருட்பிழை |
| **அர்த்த பிரபஞ்சம் (ச)** | – | பொருளுலகம் |
| **அர்த்தபுஷ்டி (ச)** | – | பொருட்செறிவு |
| **அர்த்தபேதம் (ச)** | – | பொருள் வேறுபாடு |
| **அர்த்தம்[1] (ச)** | – | பொருள் |
| **அர்த்தம்[2] (ச)** | – | பாதி |
| **அர்த்தமாகு (ச)** | – | பொருள்படு, புரி |
| **அர்த்த மானியம் (ச)** | – | இறையிலி நிலம் |
| **அர்த்த ராத்திரி (ச)** | – | நள்ளிரவு |
| **அர்த்த வேதம் (ச)** | – | பொருள் நூல் |
| **அர்த்தால் (ச)** | – | கடையடைப்பு, பணிமறுப்பு |
| **அர்ப்பணம் (ச)** | – | ஈகை, கொடை |
| **அர்ப்பணிப்பு (ச)** | – | படையல் |
| **அர்ப்பி (ச)** | – | காணிக்கையாக்கு |
| **அர்ப்புதம் (ச)** | – | ஆயிரம்கோடி |
| **அர்ப்பிதம் (ச)** | – | உரியதாக்கப்பட்டது |
| **அர்ஜி (உ)** | – | வேண்டுகோள் |
| **அரம்பை (ச)** | – | தெய்வப்பெண் |
| **அரரம் (ச)** | – | கதவு, இரும்பு |
| **அரவிந்தம் (ச)** | – | தாமரை |
| **அரவிந்தலோசனன் (ச)** | – | தாமரைக் கண்ணன் |
| **அரவிந்தன் (ச)** | – | தாமரையான் |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அரவு (ச)** | – | ஒலிஎழுப்பு |
| **அராசகம் (ச)** | – | அராஜகம் பார்க்க |
| **அராஜகம் (ச)** | – | வன்முறை, வன்செயல் |
| **அரிகந்தம் (ச)** | – | செஞ்சந்தனம் |
| **அரிகாம்போதி (ச)** | – | செம்பாலை |
| **அரிசந்திரன் (ச)** | – | ஒண்ணிலவன் |
| **அரிதாரம் (ச)** | – | பூச்சுப் பொன்துகள் |
| **அரியாசனம் (ச)** | – | அரியணை |
| **அரிஹரன் (ச)** | – | சிவனும் மாலும் |
| **அருணோதயம் (ச)** | – | வைகறை, விடியல் |
| **அருத்த பேதம் (ச)** | – | பொருள் வேறுபாடு |
| **அருவம்[1] (ச)** | – | அழகின்மை |
| **அருவம்[2] (ச)** | – | உருவின்மை |
| **அரூபம் (ச)** | – | உருவிலாத் தன்மை |
| **அரூபி (ச)** | – | உருவிலி |
| **அல்பம் (ச)** | – | அற்பம் பார்க்க |
| **அல்பாயுசு (ச)** | – | அற்பாயுசு பார்க்க |
| **அல்வா (ச)** | – | தேங்கூழ், இன்களி |
| **அலக்கு (ச)** | – | தனிமை, தனிப்பட்டது |
| **அலங்கரி[1] (ச)** | – | ஒப்பனை செய் |
| **அலங்கரி[2] (ச)** | – | அழகுபடுத்து |
| **அலங்கார சாஸ்திரம் (ச)** | – | அணியிலக்கணம் |
| **அலங்காரம்[1] (ச)** | – | ஒப்பனை, அழகு |

| அயற்சொல் | | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| **அலங்காரம்[2] (ச)** | – | அணி, அணியிலக்கணம் |
| **அலங்கார லட்சணம் (ச)** | – | அணியிலக்கணம் |
| **அலட்சியம் (ச)** | – | புறக்கணிப்பு, மதியாமை |
| **அலட்சிய வார்த்தை (ச)** | – | புறக்கணிப்புப் பேச்சு |
| **அலப்படை (ச+த)** | – | கலப்பை |
| **அலம் (ச)** | – | கலப்பை |
| **அலமாரி (உ)** | – | நிலைப்பேழை |
| **அலாக்கு (உ)** | – | தனி, தனிமை |
| **அலாதி[1] (உ)** | – | தனித்தது |
| **அலாதி[2] (உ)** | – | தனிச்சிறப்பானது |
| **அலாபம் (ச)** | – | ஊதியமின்மை |
| **அலிக்கிரகம் (த+ச)** | – | காரிக்கோள் |
| **அலுத்தன் (ச)** | – | ஆசையற்றவன் |
| **அவ்வியத்தன்[1] (ச)** | – | கடவுள் |
| **அவ்வியத்தன்[2] (ச)** | – | அறிவிலான் |
| **அவ்வியம் (ச)** | – | திருப்படையல் |
| **அவகதி (ச)** | – | அறிவு |
| **அவகாசம்[1] (ச)** | – | அமையம், சமையம் |
| **அவகாசம்[2] (ச)** | – | சொத்துரிமை |
| **அவகாசமுறி (ச+த)** | – | பாகஆவணம் |
| **அவகாசி (ச)** | – | மரபுரிமையான் |
| **அவகாரன் (ச)** | – | திருடன் |
| **அவகீதம்[1] (ச)** | – | அவதூறு |

